நம் நாடு

மலர் 1, இதழ் 260 [i.e. 261]

April 15, 1954

Record no. 1131

*Nam nāṭu*

*Malar 1, itaḻ 260 [i.e. 261]*

*April 15, 1954*

Record no. 1131

REGD. No. M. 6311

PHONE No. 85630

தனி இதழ்
ஒரு அணா
இலங்கையில் 10 சதம்

மலர் 1] [இதழ் 260

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர்... அண்ணாதுரை

"THE NAM NADU" A TAMIL DAILY : THE OFFICIAL ORGAN OF: THE D.P.F

சந்தா விபரம்
உள்நாடு (இலங்கை உட்பட)
ஆண்டு ரூ. 24—0—0
6 மாதம் ரூ. 12—0—0
3 மாதம் ரூ. 6—0—0
வெளிநாடு:
ஆண்டு ரூ. 30—0—0
6 மாதம் ரூ. 15—0—0
3 மாதம் ரூ. 7—8—0

சென்னை: சித்திரை 3உ வியாழன் (15 4—54) ★ ★ ★ வெளியூர்: சித்திரை 4உ வெள்ளி (16—4—54)

# '1960-ம் ஆண்டில் திராவிட நாடு!'

## 'அது சமதர்மக் குடியரசாகத் திகழும்'

## 'வளர்ச்சி கண்டு உறவு கொள்பவர்களிடம் இதைக் கூறிவிட வேண்டும்'

### 'ஜனநாயகம் வீசும் எஃகு கோட்டையாகட்டும் கழகம்!'

## 'வடநாடு-தென்னாடு போராட்டத்தின் இறுதி கட்டத்தை சந்திக்க உறுதி பெறுக!'

### தஞ்சை அரசியல் மாநாட்டில் ஈ. வெ. கி. சம்பத் முழக்கம்

"நமது நீண்ட நாளைய எதிரிகளை, முழுமூச்சாக எதிர்த்து வெற்றிபெற, ஜனநாயக மணம் வீசும் எஃகுக் கோட்டையாக தி. மு. கழகத்தைப் பலப்படுத்த வேண்டும். அப்படி பலப்படுத்தப்படும் கோட்டையினின்றும் எழும்பி, 'உரிமைக்காக உயிரையும் தருவேன்' என்ற உள்ள உரத்தோடு, மிக அழுத்தமாகச் சொல்லப்படுகிற தென்னாட்டு மக்களின் உரிமைக் குரல், தனது எதிரிகளை வீழ்த்தி, வீர வெற்றிச் சங்காக ஒலிப்பதைத் தடுத்து நிறுத்துகிற ஆற்றல்—துப்பாக்கிக் குண்டுகளுக்கோ, இராணுவத்தின் பீரங்கிகளுக்கோ, அல்லது உலகத்தின் வேறெந்த சக்திகளுக்கோ இல்லை என்பதை, இன்று நிலவுகிற உலகச் சூழ்நிலைகள் நமக்கு திட்டவட்டமாக எடுத்துக் காட்டிக்கொண்டிருக்கின்றன. எனவே, 'செல்வீர்! வெல்வீர்!! வாழ்வீர்!!!' என்று சொல்லி, அதற்கான வழிவகைகளைக் காண இம்மாநாடு துணை புரியும் என நம்பி இந்த மாநாட்டைத் துவக்கி வைக்கிறேன்."

—என்று, 11—4—54 அன்று, தஞ்சை மாவட்ட இரண்டாவது தி. மு. கழக அரசியல் மாநாட்டைத் துவக்கி வைத்துப் பேசுகையில், தோழர் ஈ. வெ. கி. சம்பத் குறிப்பிட்டார். அவர் மேலும் கூறியதாவது :—

★

"இன்று நிலவுகிற அரசியல் நிலைகள், பொதுச்செயலாளர் அண்ணா அவர்கள் ஆசை நாளாகக் குறிப்பிட்ட '1960-ல் திராவிடம்' என்பது, இன்னும் விரைவிலேயே சித்திக்கக்கூடியன என்றே நமக்குச் சொல்கின்றன. பெரும், பெரும் ஏகாதிபத்தியங்கள் எல்லாம் மக்கள் சக்தியின்முன் எதுவும் செய்ய இயலாதனவாகிக் கொண்டிருப்பதை நாம் காண்கிறோம்."

"நமது லட்சியம் 'வெறும்' திராவிட நாடு பெறுவதுமட்டுமல்ல; பொருளாதாரச் சமத்துவமுடைய திராவிடக் குடியரசு அமைப்பது என்பதை நான் மீண்டும் மீண்டும் உங்கட்கு வலியுறுத்திச் சொல்கிறேன். 200, 300 ஏக்கர் நிலங்கள் வைத்திருப்பவரெல்லாம் 'திராவிட நாடு' கோரிக்கையை ஏற்றுக்கொள்ளலாமா என்றெண்ணும்போது, 'நாளை' அவர்களுக்குக் காணி நிலம் மட்டும் தான் மிஞ்சக்கூடும் என்பதையும் சேர்த்து எண்ணிப் பார்த்தாக வேண்டும். எனவேதான், கழகத் தோழர்களே! நீங்கள் மிகவும் கண் விழிப்புடன் இருக்க வேண்டும்—'நண்பர்கள்' என்று நம்மிடம் வருவோரிடம்!!"

### விடுதலைப் பயணம் நெருங்குகிறது!

இனி நாம் யாரை திருத்தப்படுத்த வேண்டும்? அதற்காக பேசிக்கொண்டே இருக்கவேண்டும்? யாருடைய விடுதலைக்காக நாம் பாடுபட்டு வருகிறோமோ அந்த மக்கள் நம்மை நம்பி, நம் பின் வரத் தொடங்கிவிட்டனர்.

நமது லட்சியங்கள் பவித்ரமாவதற்குரிய செயல்களில் தான், விடுதலைப் பயணத்தை வேகமாக்குவதில்தான் இனி நாம் கவனம் செலுத்தவேண்டும். அந்த விடுதலைப் பயணத்தில் தியாகங்கள் பல புரியச் சித்தமாயிருக்கவேண்டும்.

இனி நம் சில்லரை விஷயங்களில் எல்லாம் நம் நேரத்தையும் கவனத்தையும் செலுத்தி மனதைக் குழப்பிக்கொண்டிருத்தலாகாது. நம்மை எதிர்ப்பதாகச் சொல்லி, சீறிக்கொண்டிருந்த சிவஞானங்கள் எல்லாம், 'எங்கே போயினர்', என்ற விலாசம் தெரியாதவர்களாகிவிட்டனர்.

நாம் கவலையோடு செய்ய வேண்டியதெல்லாம் ஸ்தாபன ரீதியாக, முயன்று முடியாது என்று கைவிட்டு விட்டவர்கள் எல்லாம் பார்த்து ஆச்சரியப்படும் வகையில், ஜனநாயக முறையில் இயக்கத்தை, விடுதலைப் போரின் இறுதிக் கட்டத்தைச் சந்திப்பதற்காக, பலப்படுத்த வேண்டுவது மட்டுமே தான்."

இந்த நாட்டின் சமூக நலன்கள் காக்கப்படவும், பொருளாதார அரசியல் விடுதலை பெறவும் தி. மு. கழகம் தொடர்ந்து தனது செயல்முறைகளிலே ஈடுபட்டுக் கொண்டேதான் இருக்கும். அதை ஒடுக்கிவிடத்தான் துடியாய்த் துடிக்கின்றனர் வடநாட்டவர்

நேருவும், அவர்தம் சகாக்களும் இன்றைய தினம், இந்த நாட்டிலேயே இருக்கிற வேறெவரைக் காட்டிலும், நம்மை வெகு நன்றாகப் புரிந்து கொண்டுள்ளனர். ஆகவேதான், அவர்கள், நமது குரல் வளைகளை எப்படியாயினும் அடக்கியே தீர வேண்டும் என்ற அசட்டுத்தனமான முடிவுக்கு வந்து, வெகு வேகமாக அதற்கான காரியங்களைச் செய்யத் துடங்கியுள்ளனர். மதுரையிலே பொதுச் செயலாளர் அண்ணா அவர்கள், "......இப்படியே வடநாட்டவர் நம்மை நிரந்தரமான அடிமைகளாக வைத்திருக்கும் எண்ணங்கொண்டு வஞ்சித்துக் கொண்டிருப்பார்களானால் நாம் வடநாட்டின் மீது ஒரு படை எடுப்பையே துவங்கவேண்டி வரும்" என்று பேசினார்கள். பத்து நாட்களுக்குப் பிறகு மக்கள் சபையிலே, பத்திரிகைகளைக் கட்டுப்படுத்தும் சட்டத்தை நீடிக்க வேண்டுமென்று பேசிய உள்நாட்டு மந்திரி கட்ஜு 'இப்படி' எல்லாம் பேசுகிறார்களே!—என்று குறிப்பிட்டிருக்கிறார். வட நாட்டு ஆதிக்கத்தை நாம் எதிர்க்கிறோம் என்று சொல்கிற உரிமையைக் கூட பலவந்தமாக நம்மிடமிருந்து பறித்துவிட வேண்டுமென வடநாட்டவர் மனப்பால் குடிக்கின்றனர்.

கடந்த ஒரு ஆண்டு காலமாக நமது விடுதலைப் படையின் உருவம்—(அதன் முழு உருவமல்ல)—வெகு நன்றாக அவர்களுக்குத் தெரிந்துவிட்டிருக்கிறது. தென்னாட்டிலே, வடநாட்டு ஆதிக்கத்திற்கு எதிராக வெகுவேகமாக வளர்ந்து வரும் எதிர்ப்புச் சக்திகள், தி. மு. கழகத்தின் தலைமையிலே உருவாகி வருவதையும், அந்த எதிர்ப்பு உருவத்தின் செயல் முறைகளையும், பண்டித நேரு, தனக்கிந்த நாட்டிலே 'சூடாக' தரப்பட்ட கருப்புக்கொடி வரவேற்பின் மூலம் அறிந்துகொண்டிருக்கிறார்.

"நம்முடைய லட்சியங்களை உள்ளடக்கிக் கொண்டிருக்கிற போராட்டங்களினால் ஏற்படும் அரசியல் நெருக்கடிகளை சமாளிக்க இதுவரை அவர் பெற்றிருந்த 'அரசியல் ஞானம்' போதாததால், புதிய ஆசான்களைத் தேடியலைய வேண்டிய நிர்ப்பந்தமான பரிதாபத்திற்குரிய நிலைக்கு அவர் கடந்த ஓராண்டிலே கொண்டுவந்து நிறுத்தப்பட்டிருக்கிறார்—நம்மால்!

"இந்தத் தென்னாட்டு — வடநாட்டுப் போரின் இறுதிச் சந்திப்பைச் சமாளிக்க தன்னைத் தானே தயார் செய்துகொண்டிருப்பது மட்டுமின்றி, தனது சகாக்களையும் வடநாட்டு மக்களையும் தயாராயிருக்குமாறு சொல்லாமல் சொல்லிக் கொண்டிருக்கிறார் நேரு.

தி. மு. கழகத்தவராகிய நாம் வடநாட்டை எதிர்த்துப் போரிட வேண்டுமென்ற நமது கோரிக்கைக்கு இந்த நாட்டு மக்கள் செவி சாய்த்துவிட்டனர். தங்களின் ஒப்பற்ற ஒப்புதலை நமக்குத் தந்திருக்கின்றனர். இந்த நேரத்திலேதான் நமக்கு என்றுமில்லாத துணிவும், உறுதியும், தெளிவும், ஒற்றுமையும் தேவை. இப்போது நமக்குக் கிடைத்திருக்கிற நல்ல சூழ்நிலைகளை நாம் தவறவிடக் கூடாது. மிகக் குறுகிய எதிர்காலத்தில், நாம் ஒரே மூச்சாக எதிர்த்து, வடநாட்டாரிடமிருந்து விடுதலைபெற, இப்போதே, நம்மை நாமே தயாராக்கிக்கொள்ள வேண்டும்.

10 அல்லது 15 ஆண்டுகட்கு முன்னர் நாம் மக்களிடையே அவர்களின் பிறப்புரிமையுடையதும், நிரந்தரமான நல்வாழ்விற்குரியதுமான விடுதலைக் கோரிக்கையை முன்வைத்தபோது, அதிலே அவர்களின் ஜீவலட்சியங்கள் உள்ளடங்கியுள்ளன என்பதைப் புரிந்துகொள்ளாத காரணத்தால் நம்மை வெறுத்தனர்; ஆனால், நம்முடைய இடையறா உழைப்பும், நமது கோரிக்கையினின்றும் பிரித்துப் பார்க்க முடியாத பிரிய உணர்வும், உண்மையும், உரிமையும் இன்று அவர்களின் மகத்தான சம்மதத்தை நமக்குத் தேடித் தந்துள்ளன.

நம்முடைய இந்த வளர்ச்சியைக் கண்டு நாம் பெருமைப்பட்டுக் கொண்டிருக்கிற நேரத்திலேயேதான் நம்மை நண்பர்கள் என்ற பெயரிலே பலர் நெருங்குகிறார்கள். நம்முடைய கூர்மையான அறிவையும், கடந்தகால அனுபவத்தையும் கொண்டு, நாம் நமது நண்பர்கள் யார், பகைவர்கள் யார் என்பதை சந்தேகமற ஆராய்ந்து தெரிந்துகொள்ள வேண்டும். நண்பர்களின் படையெடுப்பு பகைவர்களின் படை எடுப்பைக் காட்டிலும் மிகவும் ஆபத்தானது என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. அரசியலில் 'திராவிட நாடு திராவிடருக்கே' என்ற நமது கொள்கையை மட்டும் 'நானும் ஏற்றுக்கொள்கிறேன்,' என்று சொல்லுபவர்கள் எல்லாம் நம்முடைய நண்பர்கள் ஆகிவிட முடியுமா? யாரானாலும் சரி, நம்மை—நமது லட்சியங்கள் அனைத்தையும் புரிந்து கொள்ள தேடி மட்டுமின்றி, அவற்றை ஏற்றுக்கொள்பவர்களாகவும் இருக்கவேண்டும். பொருளாதாரத் துறையில், சமுதாயத் துறையில் நமது கொள்கைகள் என்ன என்பதையும் 'நண்பர்கள்' தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

திராவிடநாடு என்று சொன்னால் அது ஒரு சமதர்மக் குடியரசாகத் திகழும் என்று நாம் சொல்லி வந்திருக்கிறோம்.

(3-ம் பக்கம் பார்க்க)

### சென்னையில் மீண்டும்

## டிராம் ஓடும்

★

சென்னையில் மீண்டும் டிராம் ஓடும் என்று தெரிகிறது. விரைவில் இதற்கான ஏற்பாடுகளைக் காமராசர் மந்திரி சபை எடுத்துக்

(8-ம் பக்கம் பார்க்க)

# நம் நாடு

தி.மு.கழக தினஇதழ் — ஆசிரியர்: அண்ணாதுரை

சென்னை 15—4—54 வியாழன்


# ஆடு, பாம்பே!

"ஆடு பாம்பே! தெளிந்தாடு பாம்பே!
நாதர் முடிமே லிருக்கும் நாகப் பாம்பே!
நச்சுப் பையை வைத்திருக்கும் நல்ல பாம்பே!
பாதாளத்தில் குடிபுகும் பைக்கொள் பாம்பே!
பாடிப் பாடி நின்றவிளை யாடு பாம்பே!"

இப்படி ஒரு பாடல் உண்டு—இசை அரங்குகளில் கேட்கலாம்.

'மித்திரன்', இதை ஒட்டி ஓர் புதுப் பாடல் தயாரித்திருக்கிறது—படஉருவில்!

"ஆடு, பாம்பே! தெளிந் தாடு பாம்பே!
ஆடு, பாம்பே! வளைந் தாடு பாம்பே!
வந்தவர் வேற்றூர் என்று ஆடு, பாம்பே!
அவர், வந்த வழி செல்க என்று ஆடு, பாம்பே!"

என்று பண் இசைப்பது போல, 'மித்திரன்', புதிய அமைச்சர் குழுவைக் குறித்துக் கேலிச் சித்திரம் தீட்டியிருக்கிறது.

நாகம் சீறுகிறது! அது அடங்கிக் கிடந்த பெட்டி திறக்கப்பட்டுக் கிடக்கிறது. வெளியே வந்துள்ள பாம்பு, தாக்கித் தன் நச்சுப் பல்லைச் செலுத்தத் தயாராக இருக்கிறது. இந்தப் பாம்பு, சென்னை அரசியலாம்!! எதிரே, காமராஜர், குத்துக்காலிட்டு உட்கார்ந்துகொண்டு, மகுடி ஊதுகிறார். கண்ணிலே மிரட்சி!!

ஒரு சிறு கும்பல், இந்தக் காட்சியைக் காண்கிறது! உதவிக்கு எவரும் வரக் காணோம்!! ஆனால், அனைவர் முகத்திலும் காணப்படும் குறியைக் கூர்ந்து நோக்கினால்—சீறும் நாகத்தை இந்த ஆசாமியால் அடக்க முடியாது; பாபம்! பாம்பு அவரைத் தாக்கிவிடும்; தப்பித்துக்கொள்ள முடியாது!!—என்று கூறுவதுபோல் இருக்கிறது.

இந்தப் படம், காமராஜர், முதலமைச்சராவது உறுதி என்பது தெரிந்தவுடன் தீட்டப்பட்டு, நாட்டுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

இதன் பொருள் என்ன? நோக்கம் என்ன, இதைத் தீட்டி வெளியிடுவதில்? இது என்ன, அபாய அறிவிப்பா? மிரட்டலா? சாபமா?—நமக்கொன்றும் விளங்கக் காணோம்.

மண மேடையில் அமர்ந்திருக்கும் இளைஞனுக்குக் காவி உடையை மணப் பரிசாக அளித்திடும், விபரீத விளையாட்டு போல, ஆட்சிப் பொறுப்பை ஏற்பது என்று உறுதிபெற்ற உடனே, இந்தப் படம், காமராஜருக்குப் பரிசாக அளிக்கப்படுகிறது—காமராஜரின் அன்புக்குப் பாத்திரமான காங்கிரஸ் கட்சியின் ஏடுகளிலே முதன்மை முறுக்குடன் விளங்கும் 'சுதேசமித்திரனா'ல்!

சென்னை அரசியல், சீறும் நாகமாம்! ஏன் இவ்விதம் கூறும்படி நேரிட்டது?

மகுடி ஊதுகிறாராம், காமராஜர்! என்ன பொருள் இதற்கு!

பாம்பு கண்டால், பதறுவர்; பயந்தோர் ஓடுவர்! ஆண்மையாளர், அதனை ஒழித்திடத் தடி தூக்குவர்; படத்திலே தெரியும் சிறு கும்பலோ, தொலைவில் நின்று, வேடிக்கை பார்க்கிறது—மிரட்சியுடன்கூட அல்ல;—'இந்த ஆசாமியாவது, இந்தப் பாம்பை அடக்குவதாவது', என்று கூறும் விதமாக!

காரணம் உண்டோ இல்லையோ, கர்த்தனுக்கும் தெரியுமோ தெரியாதோ, அந்தக் கும்பலில் உள்ள எந்த ஆடவருக்கும், மீசை காணோம்; படத்தில், 'பாம்பு அடங்க வேண்டும்; அதை அடக்க பிடாரன் எடுத்துக்கொள்ளும் முயற்சி பலிக்க வேண்டும்', என்ற ஆசையும் தெரியக் காணோம்; படம் மட்டும், தெளிவாகப் பேசுகிறது!!

"சென்னை அரசியல் என்றால் சாமானியம் என்று எண்ணி விட்டீர், ஐயா! காமராஜரே! நீர் ஏதோ பல ஆண்டுகளாக, காங்கிரசுக்குத் தலைவராக இருந்திருக்கலாம்; அது ஒரு பிரமாதமான செயல் என்று எண்ணிக்கொண்டு, முதலமைச்சராகவும் ஆகிவிடலாம் என்று முன்வந்து விட்டீர்; உம்மாலே முடிகிற காரியமா இது; உமக்கு ஏது அந்தச் சமர்த்து; அந்த வித்தைதான் உமக்கென்ன தெரியும்; சென்னை அரசியல் ஒரு சீறும் பாம்பு; மகுடி ஊதி மட்டும் அதை அடக்கிவிட முடியாது; சொல்கிறோம், துவக்கத்திலேயே; பிறகு உமது இஷ்டம்; வர இருக்கிற ஆபத்து இன்னது என்று தெரியாமல், 'மந்திரி சபையை நானே அமைக்கிறேன்', என்று கூறிவிட்டீர் வைத்தியக்கார மனுஷரே! உண்மையைத் தெரிந்துகொள்ளும்—சென்னை அரசியல் ஒரு சீறும் பாம்பு; ஆமாம், அதன் விஷப் பல்லுக்குப் பலியாகிவிடுவீர், ஜாக்கிரதை!"—என்று படத்தின் மூலம், காமராஜருக்கு எச்சரிக்கை செய்கிறது, 'மித்திரன்'!

இத்தனைக்கும், காமராஜர், புதிய மகுடிகூடத் தயாரிக்கவில்லை; ஏற்கனவே இருந்த மகுடியைத்தான், மிகச் சிறு மாறுதல் செய்து உபயோகித்திருக்கிறார்; என்னும், இந்த எச்சரிக்கை! இந்தப் படம்!!

எந்தக் காரணம் கொண்டு இந்தப் படம் வரையப்பட்டிருந்தாலும், ஒன்று மட்டும், நாம் கூறுவோம்—'பாம்புக்குப் பாலிட்டு வளர்ப்பது ஆபத்தானது'!

நச்சுப் பையை வைத்திருக்கும் நாகம் பாம்புபோல, கெட்ட நினைப்பைக் கக்கிக் கொண்டுள்ள ஒரு கூட்டம், தமிழகத்தில் இருக்கத்தான் செய்கிறது!—'ஆவின் பாலை அரவத்துக்கு அளித்தால், அதன் பசி அடங்கிப் படுத்து உறங்கும்; அல்லது, பசி போக்கும் பால் தந்தோரிடம் பாலகன் போலப் பாசத்துடன் விளையாடும்', என்று காமராஜர் எண்ணுவாரானால், அவர், ஏமாளியாக்கப்பட்டு விடுவார் என்பதை மட்டும் திட்டவட்டமாகக் கூறுவோம்.

காமராஜரின் போக்கு, பாம்புக்குப் பாலூட்டும் கதையையே நமக்குக் கவனப்படுத்துகிறது—எனவே, இந்த விளக்கம்!

ஏற்கனவே நாம் கூறியபடி, கணை வீசு காதை துவங்கி விட்டது. கவனித்தவண்ணம் இருக்கிறோம்; காலத்திற்குக் கொண்டும் வருகிறோம்—கருத்துள்ளோருக்கு!

## லட்சியம் ஈடேறி விட்டது!!

தோழர் எஸ். எஸ். ராமசாமி அவர்கள் அமைச்சராக்கப் பட்டுவிட்டார். மற்றோர் மாணிக்கவேலர் கிடைத்துவிட்டார் என்று காங்கிரசுக்கு ஆள் தேடும் கனவான்கள் மகிழ்கிறார்கள்.

'மெயில்' இதழ், 'இது மக்களுக்கு இழைக்கப்படும் மாபெரும் துரோகம்; ஜனநாயகத்தை பாழாக்கும் முறை' என்று, வன்மையாகக் கண்டித்திருக்கிறது.

வன்னிய சமூகத்தின் விடுதலையிலும், வளர்ச்சியிலும் அக்கரை கொண்டு, உழைப்பாளர் கட்சியுடன் நேசத் தொடர்பு கொண்டிருந்த நாம், வேதனைப்படுகிறோம்.

தங்கத்தாலான தொட்டிலிலே, அழகொழுகத் துயின்று கொண்டிருந்த, கொஞ்சுமொழிக் குழவியைப் பெரும் பாம்பொன்று விழுங்கியது கண்டால், தாயின் மனம் என்ன ஆகும்! வேகும், வெடிக்கும்; ஆனால், தாயே, அந்தக் குழந்தையை எடுத்துப் பாம்பின் வாயிலே திணித்து, 'இனிக் குழந்தை, பாலுக்கு அழாது; பாதுகாப்பாகவும் இருக்கும்,' என்று கூறினால், கேட்போர் நிலை எப்படி இருக்கும்!

கனம் ராமசாமி கூறுகிறார்—'எங்கள் இலட்சியம் ஈடேறி விட்டது,'—என்று!

அவருடைய இந்தச் செயலால் தாக்கப்பட்டிருக்கும் மனம், உண்மையாகவே, திகைக்கிறது—அரசியல் இப்படியா, சீரழிகிறது என்று எண்ணும்போது, நெஞ்சம் பதறுகிறது!

'ஒரு பெரிய சமூகத்துக்கு வழிகாட்டவே, உழைப்பாளர் கட்சி வகுக்கப்பட்டது,' என்றனர்; நம்பினோம்; பூரிப்படைந்தோம். இப்போது, அமைச்சர் பீடத்துக்கு அவர் செல்லும் வழிதான் இது என்று அறிவிக்கப்படுகிறது—செயலால்—சொல் மூலமோ, அவர், இலட்சியம் ஈடேறிவிட்டதாகக் கூறுகிறார். வேலும் எறியத் துணிகிறார், வெந்த புண்ணில்!!

## பல்கலைக் கழகம்—பக்தியை வளர்க்க!

75,000 ரூபாய் செலவில் நிர்மாணிக்கப்பட்ட ஒரு ஆராய்ச்சிக் கழகத்தை டில்லி மந்திரி கட்ஜூ திறந்து வைத்திருக்கிறார்.

ஆராய்ச்சிக் கழகம்! திறந்து வைத்தவர் மந்திரி!!—எனவே, வேறு பழை சாற்றும் ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒன்றாயிருக்கும் என்றே எண்ணுவீர்கள்—அல்ல! அல்ல!!

ஆராய்ச்சிக் கழகம்-மக்களின் இலோகப் பிரச்னைகளைப் பற்றியதல்ல; சாயுச்ய பதவிக்குச் செல்லும் பக்தர்களின் பரவசம் சம்பந்தமானது.

'வைஷ்ணவத்தின்', அரும் பொருளையும், உட்பொருளையும் ஆராய்ந்து, உலகுக்கு வழங்குமாம், இக்கழகம்.

ஐக்கிய மாகாணத்தில், விருந்தாவன் எனும் பதியில், நிறுவப்பட்டிருக்கிறது.

புதிதாக அல்ல! ஏற்கனவே இதுபற்றி கற்கும் மாணவர்களைக் கொண்ட 'வைஷ்ணவ பல்கலைக் கழகம்' ஒன்று இருக்கிறதாம்! அதற்குத் துணையாக, இந்த ஆராய்ச்சிக் கழகம்!!

தஞ்சையில் ஒரு கல்லூரி வேண்டுமென்று, தஞ்சை மாவட்ட தி. மு. க.-வினர் மாநாட்டில் தீர்மானம் போடுகிறார்கள்; சர்க்காரை வேண்டிக் கொள்கிறார்கள்,—இங்கே!

அங்கே, ஒரு பல்கலைக் கழகம்! அதுவும் வைஷ்ணவத்துக்கு!! அதனை திறந்து வைப்பவர், ஆசாரிய சிரேஷ்டரல்ல—மந்திரி!!!

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## தூத்துக்குடி வழக்கு

★

செஷன்ஸ் விசாரணைக்கு அனுப்பப்பட்டிருக்கும், தோழர்களை, ஜாமீனில் விடுவிக்கும் முயற்சியை உடனடியாகத் தொடங்கும்படி, நெல்லையில் வக்கீல்களுக்கு அவசரத் தந்தி தரப்பட்டிருக்கிறது. இது சம்பந்தமான அலுவலைக் கவனிப்பதற்காகவே, வழக்கறிஞர் இளம்வழுதி நெல்லை செல்கிறார்.

சென்னையில், இந்த வழக்கு சம்பந்தமாகக் கவனித்துவரும் வழக்கறிஞர் நாராயணசாமி அவர்களும் தோழர்களை ஜாமீனில் வெளியே கொண்டுவரும் வழிவகைப் பற்றி வேலைசெய்து வருகிறார்.

மாஜிஸ்திரேட் கோர்ட்டிலே விசாரணை நடைபெற்றுக் கொண்டிருந்தபோது, பலமுறை, ஜாமீன் மனு போடப்பட்டு நிராகரிக்கப்பட்டது. நேயர்கள் அறிந்ததே.

ஹைகோர்ட்டிலும் ஜாமீன் மனு நிராகரிக்கப்பட்டது—ஆனால், கீழ்க்கோர்ட் நடவடிக்கை முடிந்ததும் மீண்டும் ஜாமீன் மனு போடலாம் என்று கூறப்பட்டது.

இந்த 'ஜாமீன் மனு' ஹைகோர்ட்டுக்கு வந்தாக வேண்டிய நிலை ஏற்பட்டால், வழக்கு நடத்தத் தாம் வருவதாக, பாரிஸ்டர் வி. எல். எதிராஜ் அவர்கள் வாக்களித்துள்ளார், என்பதையும் நேயர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## 'ஹோம்லண்டு'

★

எனக்கு, 'நம் நாடு' சம்பந்தமாகவும், வேறு பல அலுவல்கள் காரணமாகவும் ஓய்வு கிடைக்காத காரணத்தால், மே முதல் தேதி 'ஹோம்லண்டு' ஆங்கில இதழ்) வெளியிடும் நிலை ஏற்படவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கால வசதி ஏற்பட்டதும் தெரிவிப்பதுடன் இதழ் வெளிவர ஏற்பாடு செய்வேன என்றும் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்பன்,
அண்ணாதுரை.

## அவர்கள் ஆசை!

★

"இந்தியாவின் கலாச்சார ஒற்றுமையை நிலைநாட்ட வேண்டுமென்றால், அரசு மொழியாகவும், பேச்சு மொழியாகவும், இந்தியே இருக்கவேண்டும்," என்று அண்மையில் பார்லிமெண்டுத் தலைவர் மவ்லங்கர் குறிப்பிட்டிருக்கிறார். அது, அவருடைய ஆசை!

இதோ, இன்னொருவருடைய ஆசை!! இவரும், மவ்லங்கரைப் போல், பழுத்த தேசீயவாதிதான்; அது மட்டுமல்ல; டில்லி ஆட்சி பீடத்தில், உள்நாட்டிலாகா மந்திரியாகவும் இருக்கிறார். அவர்—கட்ஜூ—தெரிவிக்கிறார்:—

"இந்தியாவின் கலாச்சாரத்தை உணர்ந்து அனுபவிக்க வேண்டுமானால் சமஸ்கிருதத்தையும், அதன் இலக்கியத்தையும் கற்றாலன்றி முடியாது,"—என்பதாக!

மவ்லங்கர், கலாச்சாரத்தை 'இந்தி'யில் காண்கிறார்!

சமஸ்கிருதத்தில், தேடலாமென்கிறார், இவர்!!

இத்தகையோரிடம், சிக்கிக் கொண்டு, நாம் விழிக்கிறோம்.

## இலவச ஆரம்பக் கல்வி

### திரு—கொச்சி சர்க்கார் ஆலோசனை

டெல்லி, ஏப். 14—

நடுநிலைப்பள்ளி வகுப்பு வரை, எல்லோருக்கும் இலவசக் கல்வியை வழங்குவதற்கான திட்டமொன்றை திருவாங்கூர்-கொச்சி அரசாங்கம் தயாரித்து வருவதாக, அதன் முதன் மந்திரி பட்டம் தாணு பிள்ளை அறிவித்தார்.

திருவாங்கூர்—கொச்சி பகுதியில் மட்டும் இலவச ஆரம்பக் கல்வித் திட்டத்தைக் கொண்டு வருவதற்குச் சுமார் ரூ 45 லட்சம் மேற்கொண்டு செலவாகுமெனத் தெரிகிறது.

## ஓமியோபதி மருத்துவ முறை

### அமிர்த கௌரி எதிர்ப்பு

"ஒன்பது அல்லது ஆறு கிழமை கடித மூலம் கற்றதை ஏற்பது என்னால் முடியாது"

புதுடில்லி, ஏப். 12—

"ஓமியோபதி மருத்துவர்கள் தங்களுக்குள்ளாகவே சச்சரவிட்டுக் கொள்ளுகின்றனர்; ஒன்பது அல்லது, ஆறு கிழமை கடிதமூலம் கற்ற ஒரு பாடத்தை பயிற்சிக்கு ஏற்றுக் கொள்வது என்பது, நடக்கக் கூடாத ஒன்றை என்னிடம் எதிர்பார்ப்பதாகும்,"

ஓமியோபதி பற்றிய இந்தக் கருத்தை யூனியன் சர்க்கார் சுகாதார மந்திரி அமிர்தகௌரி அவர்கள் அறிவித்துள்ளார்.



# தூத்துக்குடி சதி வழக்கு

## 50 தோழர்கள் செஷன்சுக்கு அனுப்பப்பட்டனர்

## 30 பேர்கள் விடுவிக்கப்பட்டனர்

### விசாரணைக் கோர்ட் தீர்ப்பு

திருநெல்வேலி, ஏப்ரல் 14—

தூத்துக்குடி சதி வழக்கில், தோழர்கள் கே.வி.கே. சாமி, ரத்தினம், தங்கப்பழம், நடராசன், சிவசாமி ஆகியவர்கள் உட்பட 50 தோழர்கள் செஷன்ஸ் விசாரணைக்கு அனுப்பப்பட்டுள்ளனர். இது இன்று, தூத்துக்குடி சதி வழக்கை விசாரிப்பதற்காகத் தனியாக நியமிக்கப்பட்ட மாஜிஸ்திரேட் திரு. ஹரிஹர அய்யர் அவர்களால் தரப்பட்ட தீர்ப்பாகும்.

தகுந்த சாட்சியங்களும், காரணங்களும் இல்லாததால் வழக்கில் சிக்கியிருந்த ஏனைய 30 தோழர்கள் குற்றமற்றவர்களென விடுவிக்கப்பட்டனர்.

செஷன்சுக்கு அனுப்பப்பட்டுள்ளவர்களில் தற்பொழுது உள்ளதுபோல, 30 தோழர்கள் சிறையில் அடைக்கப்பட்டிருக்க வேண்டுமென்றும், ஜாமீனில் இருக்கும் 20 பேர்கள் மட்டும் அப்படியே இருப்பார்களெனவும், மாஜிஸ்திரேட் உத்திரவிட்டார்.

சதி வழக்கில் சிக்கியுள்ள கழகத் தோழர்கள் சார்பாக எம். நெல்லையப்ப பிள்ளை, பி.ஏ. தங்கசாமி, வி. என். கந்தையா பிள்ளை, ஜி. டி. சுதர்சனம், எஸ். சுப்ரமணியம் முதலிய வழக்கறிஞர்களும், கடலூர் தோழர் இளம்வழுதி அவர்களும் வாதிட்டனர்.

குற்றம் சாட்டிய சர்க்கார் தரப்பில், உதவி பப்ளிக்பிராசிகியூடர் தோழர் தின்னப்பிரம் அவர்களும், போலீஸ் சர்கிள் இன்ஸ்பெக்டர் பி. என். கிருஷ்ண அய்யர் அவர்களும் வழக்கை நடத்தினார்கள்.

இனி 50 தோழர்கள் மீதும் செஷன்ஸ் கோர்ட்டில் சதி வழக்குக் குற்றச்சாட்டுகள் விசாரிக்கப்படும்.

ஆரம்பத்தில் சதி வழக்கில் 96 பேர் குற்றஞ்சாட்டப்பட்டனர், வழக்கு ஆரம்பமானது.

கிழக்கு வங்காளத்தில் முஸ்லிம் லீக் படுதோல்வி யடைந்ததற்கான முக்கிய காரணங்களை ஆராய்வதற்காக, மூன்று பேர்களடங்கிய குழுவொன்றை பாகிஸ்தான் முஸ்லிம் லீக் உண்டாக்கியுள்ளது.

## ராணி தரும் பரிசு!

### குணதிலகாவுக்கு யோகம்

கொழும்பு, ஏப். 14—

இப்பொழுது இலங்கையின் கவர்னர் ஜெனரலாக இருக்கும் லார்ட் சோல்பரி அடுத்த மாதம், பதவிக் காலம் முடிந்து விலகுகிறார்.

அவருக்குப் பின், தற்பொழுது இலங்கை நிதி மந்திரியாக இருக்கும் சர். ஆலிவர் குணதிலகா அவர்கள் கவர்னர்—ஜெனரலாக நியமிக்கப்படலாம் எனத் தெரிகிறது.

கவர்னர்—ஜெனரல் பதவிக்கு உயர்த்தப்படும் முதல் இலங்கையர் இவர்தானாகும்.

## ஜபருல்லா கான் வெளியேற்றப்படுவார்?

—:o:—

### முஸ்லிம் லீகில் தீர்மானம்

கராச்சி, ஏப்ரல் 14—

நாளை கூடவிருக்கும் பாகிஸ்தான் அரசியல் நிர்ணய சபையைச் சேர்ந்த முஸ்லிம் லீக் அங்கத்தினர்கள் கூட்டத்தில், பாகிஸ்தான் வெளிநாட்டு மந்திரி ஜபருல்லாகான், உள்நாட்டு மந்திரி அகமதுகுர்மனி இருவருக்கும் எதிராகத் தீர்மானங்கள் வருமெனத் தெரிகிறது.

★

### பிண பரிசோதனை

கராச்சி, ஏப்ரல் 14—

முஸ்லிம் லீக் கட்சியைப் பலப்படுத்துவதற்காக, ஒரு மாநாட்டை ஜூன் மாதத்தில் கூட்டி, தக்க நடவடிக்கைகள் எடுப்பதென இங்கு கூடிய பாகிஸ்தான் முஸ்லிம் லீக் செயற்குழு தீர்மானித்துள்ளது.

## ஐயர்வாள் மீண்டும்!

சென்னை, ஏப். 14—

சென்னை சட்ட சபையின் கௌரவ காரியதரிசியாக ஓராண்டு காலத்துக்கு ஆர். வி. கிருஷ்ணய்யர் நியமிக்கப்பட்டுள்ளார். கடந்த இரண்டாண்டுகளாகத் தற்காலிக வேலையாக அவர் சட்ட சபைக் காரியதரிசியாக இருந்தார்.

## பாக் - ஆப்கன் கூட்டாட்சி

பாகிஸ்தானும், ஆப்கனிஸ்தானும் ஒரு கூட்டாட்சி அமைக்கும் ஏற்பாட்டுக்கு வந்திருப்பதாக, அமெரிக்க 'நியூயார்க் டைம்ஸ்' இதழ், பரபரப்பூட்டும் செய்தியை வெளியிட்டிருக்கிறது. கராச்சியில் உள்ள அதிகாரிகள் இதை மறுத்திருக்கிறார்கள் ஆனால் பாகிஸ்தான் பத்திரிகைகளில் சில, பாக் - ஆப்கன் கூட்டாட்சிக்கான ஏற்பாடு நடைபெறுவதாக எழுதியுள்ளன.

## சென்னையில் மீண்டும் டிராம் ஓடும்!

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

கொள்ளும் எனத் தெரிகிறது. வேலை இழந்து தவிக்கும் 2000 டிராம்வே தொழிலாளர்களுக்கு வேலை தரவும், ஏழை மக்களின் வசதிக்காகவும் மீண்டும் டிராம் நடத்தப்பட வேண்டுமென்று காமராசர் மந்திரி சபை கருதுவதாகத் தெரிகிறது.

## கார் விபத்தில் முன்னாள் இளவரசர் மாண்டார்

லண்டன், ஏப் 14—

யுகோஸ்லாவிய முன்னாள் இளவரசர் நிக்கோலஸ் என்பவர், சொந்த மோட்டார் ஒன்றை ஓட்டி வரும்பொழுது, ஒரு மடுவில் தலறி விழுந்து, அந்த விபத்தில் மாண்டார். இவர் இங்கிலாந்து எலிசபெத் ராணி குடும்பத்துக்கு உறவினராவார்.

# கழகக் கூட்டங்கள்

★

### சூரப்பள்ளி

17—4—54 மாலை 5½ மணிக்கு

இடம்: சூரப்பள்ளி தி. மு. கழகத்தின அருகாமையில்

தலைவர்: சு. சி. கந்தசாமி

பேசுவோர்:

ஏ. கோவிந்தசாமி, எம்.எல்.ஏ.
ப. கண்ணன்
பி. எம். குப்புசாமி
இரா. தாண்டவன்
க. கு. சின்னுசாமி

★

### கழுதி

17—4—54 மாலை 5 மணிக்கு

தலைவர்: கே. வளர்மதி

பேசுவோர்:

ஏ. வி. பி. ஆசைத்தம்பி
அருண்மொழி
பூங்கோதை

★

### சிறுமுகை

17—4—54 மாலை 6 மணிக்கு

தலைவர்: க. ஜெகந்நாதன்

பேசுவோர்;

இரா. நெடுஞ்செழியன்
தில்லை—வில்லாளன்
சி. முனுசாமி
தோ. பிச்சமுத்து
தி. கோ. சிங்காரம்

### ராஜேந்திரன் நாடக மன்றம்

சென்னை, ராஜேந்திரன் நாடக மன்றத்தார், 17, 18—4—54 தேதிகளில் மதுரை, 19-4-54 கோவில்பட்டி, 20-4-54 கல்லுப்பட்டி, 22-4-54 மேலூர் ஆகிய இடங்களில், ஏற்கனவே விளம்பரம்செய்யப்பட்ட நாடகங்களை நடிப்பார்கள். நடிகர் குழுவில், நடிகமணி டி. வி. நாராயணசாமி, எஸ். எஸ். ராஜேந்திரன், எம். என். கிருஷ்ணன், சண்முகசுந்தரி, ஹேமலதா மற்றும் பலர் உள்ளனர்.

# 'கோயா' வெறியாட்டம்

—(:)—

## புதுவையில் பிரெஞ்சு அக்கிரமம்

—(:)—

### காலிகள் காட்டாட்சி நடத்துகின்றனர்

கோயா எனும் பிரெஞ்சு அதிகாரி, பெரிதும் பிரெஞ்சுக் காரர்களையே கொண்ட போலீஸ், இராணுவப் படையை வைத்துக் கொண்டு, அடக்குமுறை நடத்திவருகிறார்.

போலீஸ் தடியடி என்பது நித்திய நிகழ்ச்சியாகிவிட்டது. பலர் சிறைக்குள் தள்ளப்பட்டு கொடுமைக்கு ஆளாக்கப்படுகின்றனர்.

புதுவை விடுதலைக்காக கிளர்ச்சி செய்யும் தலைவர்கள், எந்தக் கட்சியினராக இருந்தாலும் தாக்கப்படுவதும், அவர்கள் வீடுகளைச் சூழ்ந்து கொண்டு தாக்குவதும் மும்முரமாகிவிட்டது.

பிரெஞ்சு கூலி பெற்றுக் கொண்டு 'குண்டர்கள்' காட்டாட்சி நடத்துகின்றனர்.

இந்தத் தாக்குதலுடன், மக்கள் மனதைக் குழப்ப, பலரகமான பிரசாரம் நடைபெறுகிறது.

"இன்று விடுதலை வீரனாக வேஷம் போடும் குபேர், பெரும் பொருள் கொள்ளையடித்தது தெரியுமா? இதை மறைக்கவே இந்த வேஷம், புரிகிறதா? மீண்டும் பதவி பெற, இந்த முயற்சி, தெரிகிறதா?"—என்று ஒரு புறம் பேசப்படுகிறது.

கம்யூனிஸ்டு தலைவர் சுப்பையாவின் சங்கதி மட்டும் என்ன? செல்வாக்கு இருந்த காலத்தில், அடி, உதை, வெட்டு, குத்து, கொளுத்து என்று ஆரம்பித்த ஆசாமிதானே—என்று கிண்டல் செய்யப்படுகிறது.

இந்தியாவில் உள்ளவர்கள் படுகிற பாடு, தெரியாதா! நாமும் அங்கு சேர்ந்து அவதிப்படுவதா! பிரெஞ்சு ஆட்சியிலே நமக்கு எவ்வளவோ 'ரசம்' கிடைக்கிறது! அதனை ஏன் இழக்க வேண்டும் என்று களிப்புக் கீதம் பாடுகிறார்கள் சிலர்.

எனினும், பொது மக்கள், "குபேர் கொள்ளையடித்திருந்தால், வழக்கு நடாத்திக் கூண்டில் அடைப்போம்; சுப்பையா ஆர்ப்பரித்தால், அடக்குவோம்; பிரெஞ்சு ஆட்சி ஒழியட்டும்; பிறகு, 'தலைவர்கள்' என்று வேடமிட்டுத் திரிபவர்களிலே யாரார் மீது குற்றம் இருக்கிறதோ, அவர்களைக் கண்டுபிடித்துத் தக்க தண்டனை தருவோம்; ஆனால் அதைக் கூறிக்கொண்டு விடுதலைப் போரை நிறுத்தமாட்டோம்," என்று முழக்கமிடுகிறார்கள்.

"பிரெஞ்சு—இந்தியப் பொது மக்கள் போலித் தலைவர்களை நம்பி மோசம் போகாமல் தங்களைத் தாங்களே நம்பி அன்னிய ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற ஆசைப்படுகிறோம்"

என்று 'விடுதலை' இதழ் தீட்டியுள்ள தலையங்கத்தைப் பார்த்து, "ஆமாம்! இப்போது தலைவர்கள் என்று பலபேர் வருகிறார்கள்—அவர்களை எல்லாம் நம்பிவிட்டோம் என்று அர்த்தமல்ல; நாங்கள் நடத்தும் விடுதலைப் போரிலே தான் எங்களுக்கு நம்பிக்கை—அதைத் தொடர்ந்து நடத்தி வருவோம்; தவறு செய்யும் தலைவர்களை கவனத்தில் வைத்துக் கொள்வோம்; கண்காணித்து வருவோம்," என்று கூறுகின்றனர்.

புதுவை நிலைமையை நேரில் கண்டறிந்து சென்ற பிரெஞ்சு அதிகாரி, பிரெஞ்சு மந்திரி சபைக்கு நிலைமையை எடுத்துரைத்தாராம்.

நாளுக்கு நாள் ஒலி அதிகமாகி வருகிறது என்று விடுதலைப் போரில் ஈடுபட்டோர் மகிழ்ச்சியுடன் கூறிக்கொண்டபடி, அடக்குமுறை தந்துள்ள தழும்புகளைத் தடவிப் பார்த்துக்கொண்டு, "பிரெஞ்சு ஆதிக்கம் ஒழிக!" என்று முழக்கமிடுகின்றனர்.

### காரைக்கால் தோழர்களுக்குக் கைவிலங்கு!

காரைக்கால், ஏப். 13—

காரைக்காலில் கைது செய்யப்பட்டுள்ள ஷேக் மதார் சாயபு மரைக்காயரும், எம். நாகராசன், பி. பிச்சைக்கண்ணு, ஐப்புதாசன் ஆகியோர் இன்று கோர்ட்டில் ஆஜர் செய்யப்பட்டனர். தடையை மீறி ஊர்வலம் சென்றதாக அவர்கள் மீது சுமத்தப்பட்டுள்ள குற்றச்சாட்டுக்குப் பதில் கூற 3-நாட்கள் அவகாசம் கொடுக்கப்பட்டுள்ளது. அவர்களுக்குக் கைவிலங்கு போடப்பட்டது; ஜாமீன் விடுதலை மனு நிராகரிக்கப்பட்டது; வழக்கு விசாரணை 21-ம் தேதி ஒத்திவைக்கப்பட்டுள்ளது.

# தோழர் சம்பத் சொற்பொழிவு

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இந்த நாட்டிலே, முதன் முதலிலேயே பொதுவுடைமை பற்றி பேசியவர்கள் நாம்தான். திராவிட நாடு அமைகிறதென்றால், அமையும்போதே நிலப் பிரபுத்துவமும், முதலாளித்துவமும் ஒழிக்கப்பட்ட ஒரு சமதர்மக் குடியரசாகத்தான் அமைக்கப்படும் என்பதையும் 'நண்பர்கள்' திட்டவட்டமாகத் தெரிந்துகொண்டாக வேண்டும்.

திராவிட நாடு திராவிடருக்காக்கப்படும்போது சமதர்மச் சமுதாயம் உடனடியாக உருவாக்கப்படாவிட்டால், மக்கள் இன்று நம்மீது கொண்டிருக்கிற மகத்தான நம்பிக்கை அத்தனைக்கும் நாம் துரோகம் இழைத்தவர்களாவோம். இன்று யாரால் ஆதரிக்கப்பட்டு வளர்ந்திருக்கிறோமோ அவர்களாலேயே தூரத்தப்படுவோம்.

இன்று காங்கிரஸ் மக்களை இழந்தது ஏன்? 60, 70 ஆண்டுகளாக மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருந்த காங்கிரஸ், கடந்த 6, 7 ஆண்டுகளில் 'ஜனவிரோத காங்கிரஸ்' என்ற நிலைக்குத் தள்ளப்படுவது ஏன்? காங்கிரசார் வெள்ளையரை எதிர்த்துச் செய்த தியாகங்கள் என்ன சாமான்யமானதா?

இன்று நம் கண்களில் கண்ணீர் நிரம்பச் செய்யும்படி கரம் ஒன்றை இழந்து காட்சி தரும் 'ஜோசப்'கள் காங்கிரசிலே ஏராளம்; இருந்தாலும், இன்று அவர்களை மக்கள் மறந்து, வெறுப்பது ஏன்? விடுதலை ஆர்வத்திலே காங்கிரசார், மக்களின் எதிர்காலத்தை மறந்தனர். விடுதலைப் போரின் இறுதிக் கட்டத்திலே முதலாளிகளின் முகாமாக மாறியது காங்கிரஸ்! அதன் விளைவுதானே, இன்று மக்களால் காங்கிரஸ் வெறுக்கப்படுவது?"

[குறிப்பு:—தஞ்சை அரசியல் மாநாட்டுத் துவக்க விழாவில் தோழர் ஈ. வெ. கி. சம்பத் ஆற்றிய சொற்பொழிவின் பிற்பகுதியை மட்டுந்தான் இதுவரை தந்துள்ளோம். அவருடைய சொற்பொழிவின் முற்பகுதி நாளை இதழில் வெளிவரும்.]

# போராட்டங்களில் கலந்துகொண்ட தி. மு. கழக தோழர்களுக்கு அஞ்சலி

## திருச்சி பொதுக்குழு முடிவுகளுக்குத் தஞ்சை மாவட்ட மாநாட்டின் ஒப்புதல்

### புதிய கல்வித் திட்டத்தையும், வழக்குகளையும் வாபஸ் வாங்க புதிய அமைச்சர் குழுவிற்குக் கோரிக்கை

### தஞ்சை மாநாட்டு முடிவுகள்

10, 11—4—54-ல், தஞ்சையில் நடைபெற்ற சமூக சீர்திருத்த, அரசியல் மாநாடுகளில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் விவரம் கீழே தரப்பட்டுள்ளது :—

1. தோழர்கள் எம். என். ராப், தனுஷ்கோடி, நெடும்பலம் சாமியப்பா, அருப்புக்கோட்டை முத்து; பட்டிவீரன்பட்டி சௌந்திரபாண்டியன், திருச்சி சங்கரன், கே. கே. சோமசுந்திரம், கீழகம் மங்குறிச்சி முருகையா ஆகியோர் மறைவுக்காக இம்மாநாடு வருந்துவதுடன் அவர்கள் குடும்பத்தாருக்குஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறது.

—தலைவர்

2. தஞ்சை மாவட்டத்திலிருந்து மும்முனைப் போராட்டங்களில் கலந்து அடக்குமுறை கொடுமைக்கும், சிறைத் தண்டனைக்கும் பலியாகி அவதிப்பட்ட 500-க்கு மேற்பட்ட தொண்டர்களுக்கு இம்மாநாடு தன் வணக்கத்தையும், நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறது.

—தலைவர்

3. சமீபத்தில் பாகிஸ்தான்—அமெரிக்க முதலாளித்துவ ஏகாதிபத்தியத்தோடு செய்துகொண்ட இராணுவ ஒப்பந்தம், ஆசிய நாடுகளில் நிலவும் அமைதிக்கும் பங்கம் விளைவிப்பதால், அதை இம்மாநாடு வன்மையாகக் கண்டிப்பதோடு, உடனடியாகக் கைவிடுமாறு பாகிஸ்தான் சர்க்காரை வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறது.

—தலைவர்

4. சென்னை சர்க்கார் உடனடியாக ஒருமுனை விற்பனை வரியைக் கொணர்ந்து தற்சமயம் வியாபாரிகள் அடைந்து வரும் இன்னல்களைத் தவிர்க்குமாறு சர்க்காரை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

—முன்மொழிந்தவர் :
ஆர். பழனிசாமி
—வழி மொழிந்தவர் :
காஞ்சி-சி. வி. ராசகோபால்
என். ஏ. ராஜமாணிக்கம்

5. இப்போது சுயமரியாதைத் திருமணங்களைக் குறித்து சில பிரச்னைகளைக் கிளப்பியிருக்கும் சர்க்கார், நம் நாட்டில் நடக்கும் எல்லா வகைத் திருமணங்களையும் சட்ட பூர்வமாகப் பதிவு செய்தால்தான செல்லுபடியாகும் என்று உத்தரவிடுமாறு சர்க்காரை இம்மாநாடு வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறது.

—முன். பன்னீர்செல்வம்
—வழி : சிற்றனி-சுப்ரமணியம்

6 இந்த உபகண்டத்திலுள்ள எல்லா மக்களுடைய நல்லெண்ணத்தையும், ஒத்துழைப்பையும் சர்க்கார் பெறவேண்டுமானால் தென்னாட்டு மொழிகளில் ஒன்றான தமிழை அரசாங்க மொழியாக இணைக்கும்படியும், இந்தியைக் கட்டாயபாடமாக மற்றவர்கள் மேல் திணிப்பதை நிறுத்தும்படியும் மத்திய சர்க்காரைக் கேட்டுக் கொளுவதுடன் இதை ஆதரித்து நடைமுறையில் கொண்டுவர திராவிடர்கள் அனைவரும் ஒன்றுபட்டு பணியாற்ற வேண்டுமென இம்மாநாடு கேட்டுக் கொள்ளுகிறது.

—முன் : கு—வாசல்
கிருஷ்ணமூர்த்தி
—வழி : சீர்காழி ஒலி

7. தஞ்சையிலிருந்து அதிகமான மாணவர்கள் கல்லூரிகளில் படிக்க நேர்ந்தக்கும், திருச்சிக்கும் சென்று அவதிப்படவேண்டியிருப்பதால், தஞ்சையில் ஒரு கல்லூரி ஏற்படுத்த இம்மாநாடு சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறது.

—முன் : திருமாறன்.
—வழி : கரந்தை கணேசன்.
தஞ்சை சுந்தரன்.

8. பிரெஞ்சு ஏகாதிபத்தியத்தை எதிர்த்து புதுச்சேரி, காரைக்கால் ஆகிய இடங்களில் நடக்கும் இணைப்புக் கிளர்ச்சியை இம்மாநாடு ஆதரிப்பதுடன், அந்தப் போராட்டம் வெற்றி பெற தி. மு. கழகம் தன்னாலான உதவி அவ்வளவும் செய்யும் என உறுதி அளிக்கிறது.

—முன். : கொரடாச்சேரி—
வைத்திலிங்கம்
—வழி. : இட்டப்பா

9. அண்மையில் அமையப் போகும் சென்னை புதிய மந்திரி சபையானது ஜனநாயகத்தை மதித்து, ஆச்சாரியாரின் வர்ணாசிரம கல்வித் திட்டத்தை உடனடியாக வாபஸ் பெற வேண்டுமென இம்மாநாடு வற்புறுத்துகிறது.

—முன். . தில்லை வில்லாளன்
—வழி : மாயவரம்
சௌந்தரராசன்.

10 கல்லக்குடி, அந்தக்குடி கழகத் தோழர்கள் மீது தொடுக்கப்பட்டுள்ள வழக்குகளை வாபஸ் போகும் புதிய மந்திரி சபை வாபஸ் பெற வேண்டுமென்று இம்மாநாடு கேட்டுக் கொள்ளுகிறது.

—முன். : எம். என். மணி
—வழி. : மதுரை
அய்யாசாமி

11. பெரும் நில பிரபுக்கள், மடாதிபதிகள், ஆலயங்களின் தர்ம பாகங்கள் ஆகியவை போரால் உள்ள ஆயிரக் கணக்கான ஏக்கர் நிலத்தில் தேவைபோக மிச்சத்தை விவசாயிகளுக்குப் பிரித்துத் தரவேண்டுமென்றும், நிலவுச்சவரம்பைப் பொறுத்தவரை ஒரு கட்டுப்பாட்டை ஏற்படுத்த வேண்டுமெனவும் இம்மாநாடு சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறது.

—முன் : சிதம்பரம் பொ.
சொக்கலிங்கம்.
—வழி : பாலகுருசாமி

12 சமீபத்தில் இந்திய உபகண்ட முதலமைச்சர் பண்டித நேருவும், இலங்கை முதல் அமைச்சர் கொத்தலாவலையும் செய்துகொண்ட ஒப்பந்தம், இலங்கை வாழ் திராவிடர்களுக்குக் கேடு விளைவிப்பதாக இருப்பதால் அதை ரத்துசெய்வதுடன், இலங்கை பிரச்னையைத் தீர்த்து வைக்கும் பொறுப்பைத் திராவிட நாட்டுத் தலைவர்களிடமே ஒப்புவிக்கும்படி இம்மாநாடு மத்திய சர்க்காரை வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறது.

—முன்: கலாகேசன் (இலங்கை)
—வழி: கலையன்பன்.

13. தீண்டாமையை ஒழித்து விட்டோம் என்று கூறிக்கொள்ளும் காங்கிரஸ் ஆட்சியிலே, தாழ்த்தப்பட்ட தோழர்களை உணவு—சிற்றுண்டி விடுதிகளிலே அனுமதிக்காமல் செய்யப்படும் ஜாதிக் கொடுமையை இம்மாநாடு வன்மையாகக் கண்டிப்பதுடன், உடனடியாக இவ்வித ஜாதி வெறியை ஒழிக்கும் வகையில் சென்னை அரசினர் சட்ட மூலமாக ஆவனசெய்ய வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறது.

—தலைவர்.

14 தஞ்சையிலிருந்து பட்டுக்கோட்டைக்கு ரயில் போக்குவரத்துக்கு வேண்டிய சர்வே முதலியன செய்து முடித்தும், இன்னும் அந்த வேலையை எடுத்துக் கொள்ளவில்லை; ஆகையால் உடனடியாக அந்த வேலையை எடுத்து சீக்கிரம் பூர்த்தி செய்யும்படி இம்மாநாடு மத்திய சர்க்காரை கேட்டுக் கொள்ளுகிறது.

—தலைவர்.

### நன்றி அறிவிப்பு

"10, 11—4—54-ல் நடந்த தஞ்சை மாவட்ட 2-வது சமூக சீர்திருத்த, அரசியல் மாநாட்டிற்கு எனது அழைப்பிற்கிணங்கி வந்து, கண்ணியத்துடனும், கட்டுப்பாடுடனும் தொண்டாற்றிய மாநாட்டுத் தொண்டர்களுக்கு எனது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்," என தஞ்சை மாவட்ட 2-வது மாநாட்டுத் தொண்டர் படைத் தலைவர் கு. அடைக்கலம் அறிவிக்கிறார்.

### மேல்குமாரமங்கலம் பஞ்சாயத்து தீர்மானம்

8—4—54ல் நடைபெற்ற பஞ்சாயத்து கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானம் நிறைவேறியது.

"இம்மாநிலத்தின் மச்சிளம் குழந்தைகளை பாழாக்கும் வருணாசிரமக் கல்வி முறையின் மூலகர்த்தாக்கள் அபார மூளை தோழர் இராசகோபாலாச்சாரியும், அதிசய மூளை தோழர் வி. ராமச்சந்திரனும் பதவியைத் துறந்தது பற்றி இச்சபை தனது 'நன்றியறிதலை'த் தெரிவிக்கின்றது. இனி அரசியலில் வரும், எந்த 'மாணிக்கவேலரு'ம், இம்மாதிரி கல்வியைப் பள்ளிகளில் வைத்துப் பாலகர்களைப் பாழாக்காமல் இருக்கும்படி ஏகமனதாக வற்புறுத்துகின்றது."

### சீர்திருத்தத் திருமணம்

★

முக்கூடல், ஏப் 9—

முக்கூடல் திரு. பா. செல்லையா அவர்கள் குமாரரும், தி மு. கழகத்தின் பிரபல ஊழியருமான தோழர் பா. சேதுராமலிங்கத்துக்கும் திரு. கோ. பொன்னு அவர்கள் குமாரத்தி தோழியர் இலக்குமிக்கும் 7—4—54-ல் மணமகன் இல்லத்தில், நெல்லை மாவட்ட தி. மு கழக அமைச்செயலாளர் திரு சு. கந்தசாமி தலைமையில் சீர்திருத்தத் திருமணம் நடைபெற்றது. தோழர்கள் பலர் மலர் மாலைகளும், வெகுமதிகளும் அன்பளிப்பாக வழங்கினர். மணமகன் நன்றி கூறினார். இதன் நினைவாக, 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 5 அளிக்கப்பட்டது — வரப் பெற்றோம் — நன்றியுடையது—பொறுப்பாளர்.

### களம்பூர் அடக்குமுறை கண்டனக் கூட்டம்

கிளைக் கழகங்களுக்கு மாவட்ட செயலாளர் வேண்டுகோள்

வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள களம்பூர் உழவர்கள் நடத்திவரும் உரிமைக் கிளர்ச்சியை ஆதரித்தும், அவர்கள் மீது அடக்குமுறை வீசிய அரசியலார் போக்கைக் கண்டித்தும், 18—4—54-ல், கண்டனக் கூட்டம், கண்டன ஊர்வலம், செயற்குழு கூட்டம் நடத்தி, களம்பூர் உழவர் கிளர்ச்சியை மக்களுக்கு விளக்கி, தீர்மானத்தை நிறைவேற்றி அரசியலாருக்கு அனுப்பி வைப்பதுடன் தீர்மானத்தின் நகல் ஒன்றை தலைமை நிலையத்திற்கும், மாவட்ட கழகத்திற்கும் அனுப்பி, மாவட்ட கழகத்தின் தீர்மானத்தை நிறைவேற்றித் தருமாறு எல்லாக் கிளைக் கழகங்களையும் மாவட்ட கமிட்டியின் சார்பில் கேட்டுக்கொள்கிறேன்," என்று ஏ. எல். சி. கிருஷ்ணசாமி அறிவிக்கிறார்.

### சூளூர் வள்ளுவர் படிப்பக உதவி நிதி நாடகம்

18—4—54 ஞாயிறு இரவு 9–30 மணிக்கு சூளூர் சுந்தரனார் பந்தலில், தோழர் மு. கருணாநிதி தலைமையிலும், திருப்பூர் தோழர் எஸ். ஆர். சுப்ரமணியம் முன்னிலையிலும் என். எஸ். கிருஷ்ணன், டி. ஏ. மதுரம் குழுவினர் நடிக்கும் "பணம்" என்ற நாடகம் நடைபெறும்.

### இளங்கோ நாடக மன்றம்

கோவை-திருப்பூர் இளங்கோ நாடக மன்றத்தின் கூட்டம் 16—4—54 மாலை 6 மணியளவில் மன்றக் கட்டிடத்தில் நடைபெறும். தோழர் கே. ஆர். சாமி தலைமை வகிப்பார். 'மரண மாளிகை' நாடகத்தில் சில காட்சிகள் நடித்துக் காட்டப்பெறும் தோழியர் இறைமணி இசை வழங்குவார்.

### தோழர் மீ. சு. இளமுருகு சுற்றுப் பயணம்

ஏப்ரல் 17 : இராசிபுரம்
18 : இராசிபுரம்
19 : மாராண்ட அல்லி
22 : முத்துக் கவுண்டன் பாளையம்
மே 2 : திண்டுக்கல்

### தில்லை - வில்லாளன் சுற்றுப் பயணம்

ஏப். 17, 18: நெல்லை மாவட்டம்
மே. 2 : திண்டுக்கல்
7, 8, 9 : நாஞ்சில் மாவட்டம்

### "பகுத்தறிவு"

ஒரு திங்கள்கூட தவறாது வெளிவரும் "பகுத்தறிவு", 15—4—54 சித்திரை மாத இதழ் அச்சு இயந்திரத்தில் ஏற்பட்ட எதிர்பாராத சில கோளாறுகளினால் 20-4-54-ல், வெளிவரும் என்பதை வாசகர்களுக்கும், விற்பனையாளர்களுக்கும் அறிவித்துக் கொள்ளுகிறோம்.

—நிர்வாகி

### கொடியேற்று விழா

13—4—54 காலை 7 மணி அளவில், தமிழ்ப் புத்தாண்டை போட்டி, முகவை மறவர் தெரு சங்கத்தின் முன்பாக தோழர் க. இளஞ்செழியன் தலைமையில், தோழர் லெ சாத்தையா, தி மு கழகக் கொடியை ஏற்றி வைத்தார்.



### பிறப்பு

★

#### "பாண்டியன்"

ஒரத்தநாட்டுப்பேட்டை, ஏப். 10—

26—3—54-'ல், ஒரக்காட்டுப்பேட்டையில் தி. மு. கழக செயலாளர் தோழர் கு. மு. இளங்கோ அவர்களின் துணைவி இலக்குமிக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது தாயும், சேயும் நலம். குழந்தைக்கு "பாண்டியன்" என பெயரிடப்பட்டது. இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ 1 அன்பளிப்பாக அளிக்கப்பட்டது —வரப்பெற்றோம்— நன்றியுடையது—பொறுப்பாளர்.

* * *

#### "கலைக்கோவன்"

கன்னியலசு, ஏப். 10—

5—4—54-ல், பிறந்த கன்னியலசு இயக்கத் தோழர் பன்னி அன்னை அவர்களின் ஆண் மகவுக்கு, ஆசிரியர் ப. குதளரசன் அவர்களால் "கலைக் கோவன்" என்ற பெயர் சூட்டப்பட்டது, அதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிப்பு அளிக்கப்பட்டது— வரப்பெற்றோம் — நன்றியுடையது—பொறுப்பாளர்.

* * *

#### "அருண்மொழி"— "நெடுஞ்செழியன்"

கல்லுக்குழி, ஏப். 10—

கல்லுக்குழி தி. மு. கழக உறுப்பினர்கள் தோழர் அ. சா. கண்ணு—தோழியர் கனகம்மைக்கு 24—3—54-ல், பிறந்த இரு குழந்தைகட்கு "நெடுஞ்செழியன்"—"அருண்மொழி" என்று பெயரிடப்பட்டது. இதன் நினைவாக, 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிப்பாக அனுப்பப்பட்டது — வரப்பெற்றோம் — நன்றியுடையது—பொறுப்பாளர்.

• • •

#### "தமிழ்வாணன்"

முக்கூடல், ஏப். 9—

முக்கூடல் தி. மு. கழக மாவட்டப் பிரதிநிதியும் நெல்லை மாவட்டப் பொருளாளருமான தோழர். மா. சு. முத்துக்குட்டி அவர்களின் துணைவியார் தோழியர் கனியம்மாளுக்கு 4-4-54-ல், ஒரு ஆண் குழந்தை பிறந்தது. தாயும், சேயும் நலம். குழந்தைக்கு 'தமிழ் வாணன்' எனப் பெயர் சூட்டப்பட்டது.

### திராவிட கைத்தறி நெசவுத் தொழிற் சங்கம்

சின்னாளப்பட்டி, ஏப். 7—

3—4—54ல் மேற்படி சங்கத்திற்கு கீழ்க்கண்ட நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—தலைவர்: ஆர். வெள்ளைச்சாமி, துணைத் தலைவர் : சு. காமாட்சி; செயலாளர் : பி. எஸ். மணி; துணைச் செயலாளர் : கே. பி. சங்கர்; கமிட்டி உறுப்பினர்கள் : கே. லகுமையா, பி. பொன்னம்பலம், எஸ். இராமகிருட்டினன், பரசுராம், அ. வீரப்பன்.

